# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மக - மார்கழி - 2015 - டிசம்பர்

48

கோவிலூர் மடாலயத்திலிருந்து
வெள்ளநிவாரணப் பொருள்கள்
அனுப்பிவைக்கும் காட்சி



உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – மார்கழி – 2015 – டிசம்பர்  இதழ் – 42

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ்  ரூ 10.00
ஆண்டுச் சந்தா  ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

பச்சைக் கொடியாள் பவளச் செவ்வாய்
பங்கய வதனச் செங்கயற் கண்ணாள்
பரமனுக்(கு) இசைந்த அரதன வல்லி
பாவம் போக்கும் மதுநதிப் பூவை

இச்சைக்(கு) உகந்த பச்சைக் கிளியை
ஏந்திய கையள் திரிபுவ நேசன்
இதயம் இருக்கும் மதிமுகப் பாவை
எழில்திரு நெல்லை எனும்பெயர்ச் செல்வி

அச்சுப் பதுமை அம்பலத்(து) ஆடி
அணைத்து மகிழும் அம்புயப் பெண்ணாள்
ஆண்டவர்க்(கு) அருளிய தாண்டவன் வாழும்
ஆலயம் வந்தார் மாலயம் காண்பார்

செச்சை அணிந்த செவ்வேள் அன்னை
சீர்மிகு கழனி வாயிலைக் காக்கும்
சித்திரப் பாவை முத்தமிழ்க்(கு) ஆவி
சீரடி பணிவார் பேறுஅடை வாரே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

கடந்த 2004ஆம் ஆண்டு வாயு பகவானின் கோர தாண்டவத்தாலே இடர்ப்பட்டோம். இந்த ஆண்டு வருண பகவானின் ஊர்த்தவ தாண்டவத்தால் சென்னை, கடலூர்ப் பகுதிகள் பேரிழப்பைச் சந்தித்து இருக்கின்றன. திருநெல்வேலி, இராமநாதபுரம், தேனி மாவட்டங்கள் அதனின்றும் குறைந்த அளவு இழப்புக்களைச் சந்தித்து இருக்கின்றன. மற்றைய மாவட்டங்களில் பெரும்பாலும் வழக்கத்திற்கு அதிகமாக மழை பொழிந்ததால் பயிர்கள் அழியக்கூடிய வாய்ப்புக்கள் உள்ளன.

இந்தப் பேரிடரால் இழப்புகள் - உயிரிழப்பு உள்பட, பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. மனிதர்கள் எந்தவிதமான பாகுபாடுமின்றி ஒருவருக்கொருவர் உதவி செய்துள்ளனர். அதே சமயம் சுனாமி காலத்தில் மோதிரத்திற்காகவும், காதணிகளுக்காகவும் உயிரிழந்தவர்களின் காது, மூக்கு, விரல்களை வெட்டிய அரக்கர்களையும் பார்த்தோம். இப்பொழுது நிவாரணப் பொருட்களை மடக்கிப் பறிக்கும் அரக்கர்களைப் பார்க்கிறோம். மேலும், உயிர் பிழைப்பதற்காகத் தங்களுடைய வீடுகளைத் துறந்து வெளியிடங்களுக்கு ஓடியவர்களுடைய வீடுகளை உடைத்துப் பொருள் திருடும் அயோக்கியர்களையும் பார்க்கிறோம். இப்படிப்பட்ட நெறிகெட்ட மனிதர்கள் கடவுளின் கருணையால் மிகக் குறைவாகவே உள்ளனர்.

வீடு, உடைமைகள் அனைத்தையும் இழந்து உயிர் பிழைக்கும் ஒரே முனைப்போடு தவிக்கின்ற மக்களைத் தங்களுடைய உயிரையும், ஏற்படும் துயர்களையும் பொருட்படுத்தாது காப்பாற்றியவர்கள் ஏராளம். இந்தப் பேரழிவாலே மயங்கிக்கிடந்த மனித நேயம் சிலிர்த்தெழுந்து வாயு வேகத்தில் தொண்டாற்றியதைப் பார்த்தோம். மதம், ஜாதி, பொருளாதாரத்தரம் அனைத்தையும் கடந்து மக்கள் மக்களாகவே வாழ்ந்து, சுயநலம் மறந்து அடுத்தவர்களுடைய துயரம் துடைக்கத் துடித்த காட்சிகள் நம் மனதில் என்றும் பசுமையாக நிற்கும். எல்லாத் தரப்பினரும், மேல்மட்ட அலுவலர்கள், தொழில்

அதிபர்கள், நடிகர்கள், மாணவர்கள், இளைஞர்கள் அனைவரும் ஒன்றுபட்டு இரவு பகல் பாராமல் தொண்டாற்றியது மனிதம் இன்றும் நிறைவாகவே வாழ்கிறது என்பதைக் காட்டுகிறது.

கல்லூரி மாணவர்களும், இளைஞர்களும் எந்த பேதமும் (ஆண், பெண் பேதம் உள்பட) பாராமல் களத்தில் இறங்கி நிவாரணப் பணிகள், உதவி செய்ததைக் கண்டு ஒரு புதிய நம்பிக்கை பிறக்கிறது.

நம் வளாகத்திலே நிவாரணம் குறித்து அறிவித்தவுடனே அத்தியாவசியப் பொருட்களும், அவசியமான ஆடை, உள்ளாடைகள் மற்றும் பணமும் குவிந்த ஆச்சர்யம் நம் கற்பனைக்கு எட்டாத ஒன்று. அதிலும், சிறு குழந்தைகள் உற்சாகமாகப் பொருள்களைக் கொண்டு வந்து அளித்தது மனதிற்குப் பெரும் மகிழ்ச்சியை அளிக்கிறது.

இத்தகைய நிகழ்ச்சிகளால் இன்றும் நல்லவர்கள் தொகை மிக அதிகமாகவும், அயோக்கியர்கள் தொகை மிகக் குறைவாகவும் உள்ளதைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து நெகிழ்கிறது. நல்லவர்கள் சபையில் வந்து பணிகள் செய்யவும், பொறுப்புக்களை ஏற்கவும் முன்வருவார்களேயானால் நம்முடைய நாடும், மக்களும் திண்ணமாக நலம் பெறுவார்கள். எல்லா வளமும் பெறுவார்கள். மனசாட்சியுள்ள மக்களே பொதுப்பணி செய்ய வாருங்கள். அயோக்கியர்களை, அரக்கர்களை அடக்குங்கள்; நாட்டின் தரத்தைத் தூக்கி நிறுத்துங்கள்.

*ஆசிர்வாதங்கள் !*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

வைராக்யம் II : (சென்ற இதழ்த் தொடர்ச்சி)

IV மன அடக்கம் : திருவாக்கு :

1. "விஞ்சு நாகப்பதுமம் வந்ததென எப்பொழுதும்
வியாத சித்தின் இடமாய்
வெளியாகி, அல்லல் வடிவாகியே சந்ததமும்
வேறாகி நின்ற மனதே
வஞ்சத்துவம் பேசும், மிஞ்சத் தொடர்ந்தோடும்
வன்பாச கூவம் உறையும்
வாராதில் இச்சையும் முன்வந்ததில் அனிச்சையும்
வைத்து நிதம் மாயும் மாயும்
சஞ்சலம் அதுஆகவே பஞ்சப்புரங்கள் அவை
தம்மில் விளையாடி நிற்கும்
தானே செகாகிருதி ஆகியே நிற்கும் இது
தானே செகத்தை எல்லாம்
துஞ்சும்படி செய்யும் இங்குஆர் தடுப்பரிது
சொன்னமலை தூக்கி விடலாம்
சுழல்கின்ற உததியும் பருகலாம் வெங்கனல்
தொட்டே விழுங்கி விடலாம்
உஞ்சல் என உலைகின்ற நெஞ்சமதை ஒருவரும்
உழலாது அடக்க அரிதாம்
ஓகோ இதன்பெருமை ஒன்றோ அனந்தவிதம்
ஒரு பிரம சாக ரத்தில்
நெஞ்சு உருவ, அயன்ஆதி யான இவ்அகிலம் எனும்
நேரான திரைகள் ஆக்கி
நிமிடத்து அழித்துவிடும், இந்தவலு மனத்தைநான்
நிலையாது அறுக்க எளிதோ ?......" (39/70)

. . .

(விஞ்சுநாகப் பதுமம் = விந்திய மலையில் தாமரை, வீயாத = நீங்காத, கூவம் = கிணறு, பஞ்சப்புரம் = ஐம்புலன்கள், செகாகிருதி = உலகம் முழுமைக்கும், துஞ்சு = உறங்கு, உததி = கடல், உஞ்சல் = ஊஞ்சல்) ('நீள்மாயை உடைய மாயனே' என முடியும் இருபத்தெண் சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தின் ஒரு பகுதி மட்டுமாகும்)

2. "ஓயாது உழலும் மதி ஓய்வதில்லை உன்றனக்கு
வாயால் பிதற்றமதி வந்தது என்னோ நெஞ்சகமே"(126 / 68)

3. "........அனவரதம் தம்மால் மிக நொந்தே
உமிகுத்திச் சலியாதே........" (95 / 148)

4. "எண்ணெய் இருப்பு அற்ற எழில்தீபம் போலவும் நீ
எண்ணரிய இச்சை தவிர்ந்து என்று ஒழிவாய் நெஞ்சகமே" (119 / 40)

5. "உள்ளும் புறம்பும் மனம் உற்றிடும் சங்கற்பசகம்
தள்ளிச் சுகநிலையில் சார்வது என்றோ அஞ்சுகமே"(133 / 2)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1. "தத்துவ அதத்துவ விசாரம் பண்ணி, அதத்துவத்தைத் தள்ளி, தத்துவத்தை 'நான் ஆகக்' கண்டு, சந்தேக விபரீதம் அற இருக்க வேண்டும்". (152 / 50)
2. "உற்றவாறு எது வரும் ? அது வருக". (150 / 43)

கருத்துரை :

மனம் என்பது பலவாறாகவும் அலைவதாகும். அதனை அடக்குதல் எளிதல்ல. ஆனால், மன காரணமாக நமக்குத் துன்பம் விழைவதால், அதனை எவ்வாறேனும் அடக்கியே ஆக வேண்டும். இச்சைகளைத் தவிர்ப்பதாலும், தேவையற்ற பேச்சுக்களைக் குறைப்பதாலும், எண்ணக்கருவைத் தடுப்பதாலும் மனம் அடங்கும். மேலும், விதியே என, வருவனவற்றை எதிர்கொள்ளுதல், மற்றும், தத்துவ ஆய்வு மூலமாகவும் மன அடக்கம் பெறலாம்.

V விடுதல் சாதனை (சித்த சுத்தி) : திருவாக்கு :

1. "அன்னை உதரத்து அவஸ்தைகள்பட்டேன் ராமராம - இனி
ஆற்றேனே நீஅவை அற்றுவிடவேண்டும் ராமராம
பண்டே இருந்த பயங்கள் ஒழிந்தன ராமராம - நின்
பாதமலரில் பணிந்த திடத்தினால் ராமராம". (61/90)

2. ".....நன்றுகளும் தீதுகளும் இன்றி நிறைகின்ற
நமதுமயம் எல்லாமா நாடிஅது ஆவாய்". (95/147)

3. "நிலையாமோ இல்லம் நிலையாமோ செல்வம்
நிலையாமோ மைந்தர் மனை நெஞ்சே - நிலையாமோ
ஆகம் கரணாதி; அத்தனையும் சொப்பனம் என்று
ஏக நினைவாய் இரு". (30/52)

4. "பண்டுஇல்லம் மேவிஅதில் உண்டான தொழில்கள் அவை
பண்பாய் நடத்தி வருகில்,
பரிவான தந்தை, அனை, மக்களொடு சுற்றம், இவள்
பாரிஎன வந்த இந்த
வண்டக் கயவருடன் ஒன்றிடில் சந்ததமும்
வலு நரகில் விழ்வம் என்று
மனதில் ஒரு மித்திதனை விட்டுநாம் மோட்சமடை
மார்க்கம் எது என்றுதேடி......" (45/73)

5. "......பேசுற்ற இவ்வகைக்கு இடமாய் இருந்து நான்
பெற்றபேர் இன்னம் வேண்டாம்
பேசரிய முத்திக்கு வித்தாகும் உன்கருணை
பெற்றுப் பிழைப்பது என்றோ ?....." (89/137)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1. "உபசாந்தம் ஆனாலும், தன்மயமானாலும் சகலத்
தியாகம் தான்". (144/22)

2. "சரீரம் எடுத்து விசாரம் தோன்றினவரை, வெகுவிதங்களாய்
'உத்கிருஷ்டம்' என்ற பேர்கள் இல்லை. ஆதலால்,
தேகாதி முதலானவைகளில் என்ன திர நிலை ?" (157/72)

3. "அதிட்டானத்தைத் தவிர, ஆரோபத்திற்கு வடிவம் இல்லாத படியால், எல்லாம் அதிட்டானமயம் தான்". (143 / 20)

4. "பரிபூர்ணம் ஆகிய தனக்கு என்னவேண்டுவது ?" (138 / 5)

**கருத்துரை :**

இல்லம், செல்வம், குடும்பம் போன்று நம்மை உலகியலுள் ஆட்படுத்துவனவெல்லாம், உண்மைபோல மாற்றிக் காட்டப்படும் ஆரோபம் எனப்புரிந்து கொள்வதால், இவற்றைத் துறக்க இயலும். இவ்வாறு நீக்கியவர், உண்மையானதை நாடவேண்டும். இதற்கு,

1. விருப்பு - வெறுப்பு, இன்ப - துன்பம், நாம ரூபம் போன்ற இரட்டைகளற்ற உபசாந்தம், அல்லது,

2. நானே தேவைகளேதுமற்ற பூரணம் எனும்போது, எதனைப் பெறுதற்காக, எதனை நாடுவேன் எனும் தன்மயம்,

ஆகியவற்றுள், ஒன்றினைக் கடைப்பிடித்து, அதன் நினைவாகவே இருக்க வேண்டும்.

VI ஆன்றோர் சேர்க்கை (சத்சங்கம்) : திருவாக்கு :

1. "கின்னம் உறும்பல வீணரைக் கிட்டினேன் தெய்வமே - இந்த
நன்னலம் பெற்றோரை நண்ணவும் நாணினேன் தெய்வமே".
(132 / 16)

2. "செய்யும் தவமும் திரயோக நிட்டைகளும்
செய்யும் உபதேசம் திரபூசை - ஐயம் அறச்
சொல்வேன் சுதந்தரனை அன்றி உலகு என்பது
இல்என்று உணரும் இதே". (101 / 161)

3. "அகவிருத்தி தனில் உண்டாம் சீவனுக்கே
அதிட்டானம் ஞானவடிவு அல்ல என்றால்
அகவிருத்தி தான்நிதமா ஆகும் போதே
அவன் எனது என்று, யாதொன்றை அறிய ஒண்ணா

அகவிருத்தி செனித்த இடம் அகண்டமாகும்
அல்ல எனில் அவை செனித்த வடிவம் ஆகா
அகவிருத்தி செனித்த வடிவு ஆதலாலே
அதிட்டானம் தனில்அடங்கும் ஐயம் இன்றே". (97 / 153)

4. "......நல்லோர் அன்றி உயிர்க்கு உறுதி
நாடில் இலை என்றுஇன்று அறிந்தேன்". (75 / 118)

5. "சொல்லலாம் - சொல்லலாம் - அந்தக் - கரணத்தைச்
சுட்டு விட்டோம் என - வாயாலே" (136 / 2)

உபதேசத்திருவாக்கியங்கள் :

1. "சாது சங்கமே சகல கலை. சன்மார்க்கத்திற்கும் ஏது" (149 / 40)

2. "பிரபஞ்சத்தில், பஞ்ச விடய சுகத்தில் பொருந்தும் போது
பிரியமாய் இருக்கும். பிற்பாடு வெறுப்புக் காணும். இதுபோல,
தன் சொரூப சுகத்தில் பொருந்தும் போதும் பிரியம் வரும்.
எத்தனை நாள் இருந்தாலும் பிரியம் வாங்காது". (148 / 36)

3. "அதிட்டானமாகிய தானாய்ப் பார்க்கும் போது
'நான் - அவன்' எங்கே" (138 / 7)

4. "எல்லாம் தோற்றல் மாத்திரம்". (138 / 6)

கருத்துரை :

உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றின் கூட்டான அந்தக்கரணம் நீக்கப்பட வேண்டும். ஆனால், அந்தக்கரணம், இரட்டைகள், மற்றும் உலகம், ஆகியன தோற்றல் மட்டுமே (மித்தை) திரும்பத்திரும்பக் கூறப்பட்டாலும், நாம் இவற்றைப் பயிற்சி அனுபவமாக்குதல் எளிதாக இல்லை. தவம், யோகநிட்டை, பூசனை போன்ற உயர் நெறிகளும் கூட இந்த அனுபவத்தைப் பெற உதவுவதில்லை. அதே தத்துவநெறியைப் பின்பற்றி, நமக்கும் முன்னதாகவே அனுபவமடைந்த ஆன்றோர்களது சேர்க்கை மூலமாக, நாம் தற்சொரூபத்தில் பொருந்துதல் வேண்டும் என்பதற்கான தூண்டுதலும், செய்முறைப் பயிற்சியும் பெறலாம்.

பின்குறிப்பு :

மன அடக்கம் மற்றும் மன இலயம் எனக் கூறப்படும் கருத்துக்களில், மனமுக்குணம் எப்போதும் உண்டு. இவற்றில், மனதின் மடைமாற்றம் பற்றி மட்டும் கூறப்படுகிறது. மாறாக, சித்த சுத்தி என்பது, மிகத் தூய சத்துவ மனமாகும். இதனை, நிட்காமிய கர்மா மற்றும் நிட்காமிய பக்தி க்கு இணையாக அத்துவிதம் பெருமைப்படுத்துகிறது. சீவன் முக்தி பெற, சித்த சுத்தியானது இன்றியமையாததாகும்.

உலகியல் அறிவு மற்றும் துறை நுட்பம் ஆகியவற்றை 'அஞ்ஞானம்' எனக் கூறப்பட்டுள்ளமை, 'அறிவீனம்' எனும் பொருளில் அல்ல. மாறாக, உண்மையான அறிவைப் (பிரம்ம ஞானம்) பெறுதற்கு இவை உதவ இயலாது எனப் பொருள் கொள்ள வேண்டும்.

பிரம்ம ஞானம் பெறுதற்கான அறிதகுதிகளாக, நால் வகை முயற்சிகள் (சாதன சதுட்டயம்) சொல்லப்படுகின்றன. இவற்றுள் விவேகமும் வைராக்யமும் முதன்மையானவை. இவை போக, எஞ்சிய மற்ற அறிதகுதிகள் பற்றி இனிக் காண்போம்.

*(தொடரும்...)*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (சுவேதராசப் படலம்)

அனையவன் முன்னம்நீ அர(சு)அ ளித்தநாள்
நனைகெழு பழுவத்தை நண்ணி நோற்றநாள்
நினைமறை யவர்க்(கு)அனம் சிறிது நேர்ந்திலை
வினைஇத னால்பசி விடா(து)எ முந்ததே 45

இனிச்செயல் வே(று)இலை இன்று சென்றுநீ
முனிச்சில ரொடுதவம் முயன்ற காட்டிடைத்
தனித்துநின் உடல்கிடக் கின்ற தன்மையால்
பனித்ததா ராய்தசை பறித்(து)அ ருந்துதி 46

போதிஎன்(று) உரைத்தனன் புந்தி மாழ்கிஅன்(று)
ஆதியில் வனத்துவந்(து) அருந்திப் போகவும்
மேதினி வியப்(பு)உற விருத்தி ஆயது
தீ(து)இல்மா தவத்தவ செய்வ(து) ஓர்கிலேன் 47

எத்தவம் முன்னம்நான் இயற்றி னன்கொலோ
உத்தம நினைத்தொழு(து) உய்யப் பெற்றனன்
அத்தஎன்(று) அவன்கழுத்(து) அணிந்த நித்திலக்
கொத்(து)அலர் மாலையைக் கொடுத்திட் டான்அரோ 48

எமக்(கு)அதன் மேல்விருப்(பு) இல்லை ஆயினும்
சுமக்கரும் அவன்வினை தொலைத்தற்(கு) எண்ணியே
அமர்த்(து)அகங் கரித்(து)எழும் இருவர் ஆயினார்
தமக்(கு)அரும் சமிவனத்(து) இறையை உன்னியே 49

வாங்கினம் அம்மணி முத்த மாலையைத்
தேங்கிய அவன்வினை தீர்ந்து போயது
வீங்கிய பிரேதமும் நசித்து விட்ட(து)ஆங்(கு)
ஓங்கிய பசியும்நீத்(து) ஒழிந்த(து) என்பவே 50

புரிந்(து)அமு(து) உண்டவன் போல்ம கிழ்ந்தனன்
திரிந்தனன் ஆடினன் செங்கை கூப்பினன்
பரிந்தனன் பன்முறை பணிந்(து)எ முந்தனன்
விரிந்தபேர் ஆனந்தம் விராய்த் துதித்தனன் 51

அடியனேன் கொடுவினை ஆய யாவையும்
முடியவந்(து) எதிரெழுந்(து) அருளி மோசித்த
மடி(வு)இலா நினக்கும்கைம் மா(று)உண் டாம்கொலோ
தடிசின முனிவர்தம் தலைவ னேஎன்றான் 52

தானமே அருந்தவம் தான மேமகம்
தானமே கொடுவினை அனைத்தும் சாய்ப்பது
தானமே வரம்எலாம் நல்கத் தக்கது
தானமேல் இலைஎனப் புகழ்ந்து சாற்றினான் 53

தடைஅற மறுவலும் அடியில் தாழ்ந்தனன்
விடைகொடு திப்பிய விமானம் ஏறினன்
நடைகெழு சத்திய உலகம் நண்ணினன்
படைஉடைச் செழியதேர் எனப்ப கர்ந்தனம் 54

என்றலும் சைமினி இறைஞ்சி ஏத்தியே
மன்றல்அம் தாரினான் மறுத்தும் கேட்ட(து)என்
ஒன்றநீ அவற்(கு)உரைத் திட்ட காதைஎன்
வென்றவ உரைஎன மீட்டும் கூறுவான் 55

*சுவேதராசப் படலம் நிறைவுற்றது*

## *அன்னதான மகிமை உரைத்த படலம்*

முண்டக மலர்மேய முற்(று)இழை வளர்மார்பா
கண்டக உல(கு)ஓம்பல் கைக்கொளும் விறல்மாறா
தண்டக வனம்நீங்கித் தகும்நம(து) ஆச்சிரமத்(து)
எண்தக(வு) அடைந்தோமால் எண்ணஅரு முனிவரொடும் 1

சுவேதன்என் பவன்ஈன்ற தோன்றல்வன் திறல்மிக்கான்
சுவேதன்என் பவன்அவனும் துன்னுபல் படையுடையான்
சுவேதநின்(று) ஒளிர்நீற்றுச் சாந்(து)அணி துதைமேனிச்
சுவேதவல் விடையானைத் தொழு(து)எழு பத்தியினான் 2

வந்தனன் நமைக்காண மலரடி மிசைப்பணிந்தான்
புந்தியுள் மகிழ்ந்(து)ஆசி புகன்(று)எழுந்(து) இ(ரு)என்றான்
அந்தில்பின் இ(ரு)என்றல் வினைஉரு(பு) என்(று)அறிந்து
நந்திய ஓகையொடும் எழுந்துநம் எதிர்நின்றான் 3

முதல்நிலை ஏவல்வினை மற்(று)அஃ(து) எனமொழிந்தாம்
இதம்மிகு மனம்மகிழ்கூர்ந்(து) இருகரம் குவித்(து)இருந்தான்
புதல்வநின் தந்தைபசித்(து) அழல்சுடப் புழுங்காஅச்
சுதஅழல் உண்(டு)உழன்றான் தொலைத்தனம் யாம்என்றாம் 4

அத்தகு துயர்உறுதற்(கு) ஆற்றிய வினைஎவனோ
உத்தம உரைஎன்ன ஓதன மறையோருக்(கு)
எத்துணை யேனும்அவன் ஈத்(து)உண் ணாமை எனப்
பொத்திய துயரினொடும் உவகையும் பூத்(து)உரைப்பான் 5

அமிழ்தினும் இனி(து)ஆகி ஆர்உயிர்க்(கு) இன்(பு)உதவும்
தமிழ்முனி வர்அன்ன தானம்செய் திடல்குறித்தேன்
இமிழ்கடல் சூழ்உலகில் இத்தவம் சிறந்த(து)என
உமிழ்பெரும் கருணையினால் உரைத்திஎன்(று) அடிதொழுதான் 6

மனம்மகிழ்ந்(து) ஒருமுகுர்த்தம் மதிஉற ஆராய்ந்து
கனம்மிகு கேத்திரங்கள் யாவுளும் கதிர்ப்பதுவாய்
வனமது புட்கரணிப் புனலொடு வயங்குவதாய்
அநகஅற் புதம்ஆம்இச் சமிவனம் அறி(வு)உதிப்ப 7

தரைபுகழ் மன்னவனே சமிவனம் என்(று)எவரும்
உரைசெயும் தலம்எவற்றின் உள்ளும்உத் தமம்கண்டாய்
புரைஅறு தானங்கள் புகல்பல வற்றுள்ளும்
விரைகமழ் அனதானம் மேம்படு திறம்போல 8

அத்தலம் எங்(கு)உள(து)என்(று) அறி(வு)உற ஆராயில்
புத்தொளிப் பொன்மாரி பொழிந்(து)அவர் தலவடபால்
சத்திய கிரித்தென்பால் சாற்றிடும் யோசனைதான்
ஒத்திய வரைஒன்றின் உள்ளது முறையானே 9

திரிபுவ னேசர்எனும் சிவலிங்கப் பெருமானார்
திரிபுவ னேசைஎனும் தேவியோ(டு) உறைகின்றார்
திரிபுவ னத்துளும் அத்தலம் சிறந்தது காண்டி
திரிபுவ னமும்ஆணை செலுத்திடும் தேர்வேந்தே 10

சாற்றும்அத் தலம்அன்ன தானம்செய் வதற்(கு)இடமாம்
போற்றும்அத் தலம்போல்எப் புவனத்தும் இல்லைஎனத்
தூற்றுவ(து) எவன்செய்வ(து) அணுத்துணை ஆயிடினும்
ஆற்றவும் மகமேரு ஆகும்அத் தலத்(து)அறிதி 11

பலர்புகழ் கற்பகப்பூம் படலையன் ஆனாரும்
மலர்மகன் ஆனாரும் மாயவன் ஆனாரும்
உயர்தல்இல் புவனேசன் ஓங்(கு)உரு(வு) அடைந்தாரும்
அல(கு)இலர் சமிவனம்சார்ந்(து) அனம்கொடுத் திடுபேற்றால் 12

மருள்தபு நன்மனையாள் வாய்த்திட வேண்டிடினும்
பொருள்நனி வேண்டிடினும் புத்திரர் வேண்டிடினும்
தெருள்மிகு சிவஞானத் தி(ரு)உற வேண்டிடினும்
அருள்மிகு சமிவனத்தை அடைந்தன நல்கிடுவார் 13

வினைதப வேண்டுநரும் மிகுபுகழ் வேண்டுநரும்
புனைசுரர் நறுமுறுக்கும் போகங்கள் வேண்டுநரும்
கனைகடல் உலகம்எலாம் கைக்கொண்டு வேண்டுநரும்
அனையநற் சமிவனம்சார்ந்(து) அன்னம்நல் கிடுவரால் 14

எடுத்திடு கருமம்எலாம் இடைதப அயர்வாரும்
அடுத்திடு கொடுவெந்நோய் வறுமைஉற்(று) உழல்வாரும்
தொடுத்திடு ஞானம்இலாத் துட்டர்கள் ஆவாரும்
அடுத்திடு சமிவனம்சார்ந்(து) அன்னம்நல் காதாரே 15

திருவினில் சிறந்தாலும் கல்வியில் சிறந்தாலும்
உருவினில் சிறந்தாலும் ஊக்கத்தில் சிறந்தாலும்
அருவினில் சிறந்தாலும் என்பயன் மடைத்தானம்
தருவினில் சிறந்தாம்அச் சமிவனத்(து) ஆற்றார்க்கே 16

தன்னநல் கினும்பலமே தங்கிடும் எனஓர்ந்து
பன்னரும் பெருஞ்செல்வப் பற்(று)உடை யவர்சிறிதாம்
அன்னம்நல் குதல்கூடா(து) அமைந்ததம் பொருள்அளவைக்(கு)
உன்னரும் அனதானம் வீசிடல் உத்தமமாம் 17

அருள்நிறை சமிவனம்சார்ந்(து) அனம்இட நினைபோழ்தே
பொருள்நிறை சுரர்அமுதம் அவர்க்(கு)இடு புந்திசெய்வார்
தெருள்நிறை தரவிட்டால் சேர்தரும் அளவும்சேர்த்(து)
இருள்நிறை யாவுலகோர் இடுவர்பின் ஒருங்(கு)உவப்ப 18

பொருள்இலர் ஐயம்எடுத் தாயினும் அதுபுரிதல்
அருளிய அரி(து)ஆகி அத்தலம் தனைச்சார்ந்து
தெருள்மிக விடுவார்பால் சிந்தைவைத்(து) இனி(து)உண்டு
மருள்அற வாழ்ந்திடுக மற்றதும் பயன்படுமே 19

எத்தலங் களினும்அனம் இடுதலினால் பயனாம்
அத்தலத்(து) ஏற்பதினும் பெரும்பயன் அடையும்எனில்
உத்தம தலம்இதுபோல் எங்(கு)உள(து) உணர்வேந்தே
சித்தம்எண் ணியஎல்லாம் சேர்தரலாம் இதனால் 20

வெற்(று)அனம் நறும்பருப்புக் கருனைவிஞ் சியபாகு
குற்றம்இல் நெய்தயிர்பால் குலவுபல் பண்ணியங்கள்
அற்றம்இல் பாளிதம்முன் ஆயவி சேடம்எலாம்
உற்றவர் சமிவனத்தில் ஒன்றற்(கு)ஒன்று அதிகபலன் 21

வேறு

அத்தலம் அடைந்தி யாவன் எனினும்ஓர் கவள அன்னம்
மெத்திய அன்பின் ஈவான் அக்கினிட் டோமம் மேலும்
ஒத்தபல் மகமும் செய்த பயன்எலாம் உறுவான் உண்மை
வித்தக அரச ஐயம் வேண்டுவ(து) இலைஇக் கூற்றில் 22

பொரு(வு)இல் அத்த லத்தில் அன்னம் கொடுப்பவன் புசிப்போன் என்னும்
இருவரும் வயங்கும் என்றூழ் மண்டலத் தினைப்பே தித்துத்
திருவமர் ஒளியில் சென்று சத்திய உலகம் சேர்ந்து
பருவரல் ஒழிந்து பன்னாள் வாழ்குவார் பாராள் வேந்தே 23

ஆதலின் அனைய வன்னி வனம்எனும் தலத்தை அண்மி
யோதனதானம் செய்தி என்றனம் உவகை பூத்துப்
பாததா மரையில் வீழ்ந்து பழிச்சுபு விடைபெற்(று) இன்ப
மாதவர் குழாங்கள் மல்கும் அன்னமா தலத்தை உற்றான் 24

அன்னமா தலத்தின் உற்ற வளம்எலாம் அவாவி நோக்கி
மன்னவன் இறும்பூ(து)உற்று மாமதுப் பொய்கை மூழ்கி
மின்அரு நீறு பூசி விளங்குகண் மணிகள் பூண்டு
பன்னரும் பெருமை சான்ற எழுத்(து)ஐந்தும் பரிவில் எண்ணி 25

மேதகு சிறப்பின் வன்னி விநாயகர் தமைப்பூ சித்துப்
பூதரம் குழைத்த தோள்முப் புவனநா யகனை ஓர்பால்
மாதர்அம் பிகையைப் போற்றி வணங்குபு துதித்து மீண்டு
தீ(து)அகன்(று) ஒழிந்த சிந்தைப் பார்த்திபன் இதனைச் செய்தான்26

ஆலயம் சூழ உள்ள வனம்எலாம் அழித்துப் போக்கிச்
சாலிகள் விளையத் தக்க கழனிகள் சமைய ஆற்றி
மால்அமை ஏரி கட்டி மதகுகால் பலஉண் டாக்கி
நூல்அமை உழவர் பல்லோர் துவன்றிட நொடியில் செய்தான் 27

உழுபவர் ஒதை எங்கும் உவப்பின்வித்(து) இடுவார் எங்கும்
செழுவிய நாறு பேர்த்து நடுபவர் திரட்சி எங்கும்
பழுதுசெய் களைகட்(டு) ஓம்பிப் பாணிபாய்த் திடுவார் எங்கும்
முழுவதும் விளைய நோக்கித் தடிதர முயல்வார் எங்கும் 28

ஒருதொடிப் புழுதி கஃசா உணங்(கு)உற உழுதல் செய்து
பருகுதற்(கு) இனிய சாற்றுக் கரும்புமுற் பலஆங்(கு) ஏய்ப்பப்
பெருகுதண் பணைகள் தோறும் பிடித்(து)எ(ரு) இடலும் வேண்டா(து)
இருமையின் ஆங்(கு)ஆங்(கு) ஓங்கி வளர்வன ஈ(று)இ லாதே 29

விரித்(து)உரை செய்வ(து) என்னை பழனத்தின் வீக்கம் எல்லாம்
தரித்தசெ ங்கோலால் அன்பின் முயற்சிசெய் தன்மை யாலே
கரித்திரள் மறையு மாறு வளர்வன கதிர்செஞ் சாலி
பரித்தஅத் தலத்தைச் சாலி வாடிஎன் பார்பல் லோரும் 30

இளமரக் காவும் நந்த வனங்களும் எங்கும் மல்க
வளமையின் அமைத்துப் பற்பல் குடிகளும் மலிய ஏற்றிக்
கிளர்தர அவைக்கு வேண்டும் கிருகம்முன் பலவும் ஆற்றித்
தளர்(வு)அறுத்(து) இனைய செய்தான் தராபதி என்பான் மாதோ 31

உல(கு)எலாம் வந்து புக்க போதும்அங்(கு) ஒருபால் மேவ
இலகுகண் உடைய தாய சத்திரம் இனி(து)உண் டாக்கிப்
பலவித முகமன் கூறிப் பரவிமா மறையோர்க்(கு) எல்லாம்
அல(கு)அரும் அன்ன தானம் அளித்தனன் உவந்து மாதோ 32

கதிர்களை அரவு தீண்டும் காலம்ஆ யிரமேல் ஆகி
முதிர்விதி பாதம் தாம்ஓர் அயுதம்பின் மொழிஇலக்கம்
துதியமா வாசி யைஇத் துலங்குபுண் ணியகா லத்தில்
பதியநல் கன்னப் பே(று)ஓர் துவாதசிப் பலத்தை ஒவ்வா 33

நறியநெய் அயிர்தேன் இன்பால் நறுந்தயிர் கருனை நோலை
ம(று)இல்பால் இதமின் பாகு பண்ணியம் மற்றும் உள்ள
செறிஉணாவருக்கம் எல்லாம் திருமறை யவர்க்கு நாளும்
அறி(வு)உருப் புவன நாதன் அடியர்க்கு நல்கி னானே 34

வேதியர் ஆதி யாரும் விலாப்புடை வீங்க உண்ணும்
கோ(து)இல் புண்ணி யத்தின் பேற்றால் குவலயம் புகழும் வன்னி
மாதலத்(து) இறைவன் செய்யும் பேர்அருள் வலிசார்ந்(து) இம்மைத்
தீ(து)இல்பல் போகமும்துய்த்(து) உயர்சிவ பதத்தில் சேர்ந்தான் 35

இன்னும்அத் தலத்தில் அன்ன தானம்யார் இயற்று வாரோ
அன்னவர் நுகரும் போகம் அனைத்தும்ஆ தரவில் துய்த்துப்
பன்னரும் புவன நாதன் பரி(வு)அருள் வழங்கப் பெற்றுப்
பின்னர்வான் பிரம ஞானம் பெறுவர்ஈ(து) உண்மை மாதோ 36

பொருவரும் சுவேதன் என்பான் புணர்த்துபல் கழனி யாலே
ஒருவரும் சாலி வாடி கழனிஎன்(று) உரைப்பர் நாமம்
இருவரும் உணரார் மேயஇருஞ்சமி வனத்திற்(கு) என்று
தி(ரு)வரு முனிவன் கூறிப் பின்னரும் செப்பல் உற்றான் 37

*அன்னதான மகிமை உரைத்த படலம் முற்றிற்று.*





# மடாலய நிகழ்வுகள்

20.10.15 அன்று சொர்ணநாதபுரம் பழனியப்ப ஐயா குருபூசையும் 30.10.15 அன்று கண்டனூர் சிதம்பர சுவாமிகள் குருபூசையும் 31.10.15 அன்று சின்ன அழகப்ப ஐயா குருபூசையும் 5.11.15 அன்று கீழப் பூங்குடி நாராயண சுவாமிகள் குருபூசையும் 9.11.15 அன்று சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் குருபூசையும் 28.11.15 அன்று இராயவரம் வள்ளியப்ப ஐயா குருபூசையும் 15.12.15 அன்று காரைக்குடி திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூசையும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

31.10.15 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் காப்பியக் கவிஞர் நா. மீனவன் திருநாவுக்கரசு நாயனார் பற்றி மூன்றாவது மற்றும் நிறைவுச் சொற்பொழிவை நிகழ்த்தினார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலை வகித்து ஆசியுரை வழங்கினார்கள்.

28.11.15 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேல்நிலைப் பள்ளியின் தமிழாசிரியை ஆர்.பிரியா, குலச்சிறை நாயனார் பற்றியும் பெருமிழலைக் குறும்ப நாயனார் பற்றியும் சிறப்புரை வழங்கினார். கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். காப்பியக் கவிஞர் நா.மீனவன் வரவேற்புரையும் அறிமுக உரையும் நிகழ்த்தினார்.

10.12.15 அன்று கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி வணிகவியல் துறை சார்பாக அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்ற கல்லூரி மாணவர்களுக்கான ஒரு நாள் கருத்தரங்கு நடைபெற்றது.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

சிவனுடைய ஐந்து முகங்களுக்கு ஓர் எழுத்தாக உண்டானதே அஞ்செழுத்து மந்திரம். எனவேதான் தேவாரம் பாடிய மூவரும் தனித் தனியே நமச்சிவாயத் திருப்பதிகம் பாடி வைத்தனர். சிவ சிவ என்று இயம்பாதவர் தீவினையாளர் என்பார் திருமூலரும் இதனையே நிறுவுகின்றார்.

**சிவாய என்ற அட்சரம் சிவனிருக்கும் அட்சரம்**
**உபாயம் என்று நம்புதற்கே உண்மையான அட்சரம்**
**கபாடமற்ற வாயிடைக் கடந்துபோன வாயுவை**
**உபாயமிட்டு அழைக்குமே சிவாயஅஞ்சு எழுத்துமே**

உலகிலே உள்ள செல்வங்கள் அனைத்தையும் பெற வேண்டும் என்று நினைக்கின்ற மக்கள் பேராசை கொண்ட பற்பல தகாத வழிகளில் பெற முயல்கின்றனர். இதுகண்ட சித்தர் சிவவாக்கியர் நிலையாப் பொருள்களில் நேசம் வைத்து மயங்குவோரை நோக்கி மிகுதியான செல்வத்தைச் சேர்க்க விரும்புகின்ற பாவிகளே ! இறுதி வந்துற்றபின் உங்களை விறகுடன் வைத்துக் கொளுத்தும்போது மேனி வெந்து பிடிசாம்பல் ஆவதை அறியமாட்டாத உம்மை மறலியாகிய எமன் வந்து அழைத்த போது இச்செல்வங்கள் உடன் வருமா ? என்று கேட்கின்றார்.

**மிக்கசெல்வம் நீர்படைத்த விறகுமேவிப் பாவிகாள்**
**விறகுடன் கொளுத்திமேனி வெந்தபோது அறிகிலீர்**
**மக்கள்பெண்டிர் சுற்றமென்னும் மாயைகாணும் இவைஎலாம்**
**மறலிவந்து அழைத்தபோது வந்துகூடல் ஆகுமோ ?**

மாடு கன்று மக்கள் செல்வம் ஆகியவற்றோடு மனைவி மக்கள் மகிழுமாறு மாட மாளிகை கூட கோபுரங்களிலே வாழ்கின்ற போது காலதூதர் கடுகி வந்து நம்மைப் பிடிக்கின்ற போது உயிர் போய் உடல் தனியாக அசைவற்றுக்கிடக்கும் தன்மை கண்டும் வாழ்க்கை நிலையாமை உடையது என்பதை நீங்கள் உணரவில்லையே. ஞானமற்ற நெஞ்சிலே குற்றம் இல்லாத சோதியை உபணர்டுடன்

சேர்த்து அடக்கினால் தேனிலே ஊறி இனிதாகக் கிடைக்கின்ற பொருள் போல இறுதியில் தெளிவாக இருப்பது சிவாய என்ற நாமமே. எப்பொழுது உங்களைத் தேடி நாதன் வந்து பேசுவான் என்பதை அறிந்து கொள்ள வேண்டும். அப்படிப் பேசுகின்றவன் ஈசன் ஒருவனே அந்தப் பிரம ஞானத்தை வெளிப்படவிடாது தடுப்பன ஐம்புலன்கள். அவை தாம் ஒன்றையும் அறிய விடவில்லை. ஆசைபிடித்து அலையும் அந்த ஐவரையும் ஓர் எழுத்தினால் அதாவது ஓம் என்ற ஓர் எழுத்தினால் அடக்கி நீர் பேச்சற்று இருப்பின் நாதன் ஆகிய சிவபெருமான் நமக்குள்ளே வந்து பிரமஞானம் பற்றிப் பேசுவான்.

பேசுவானும் ஈசனே பிரம்மஞானம் நம்முளே
ஆசையாக ஐவரும் அடைத்தருள் செய்கிறார்.

நமது கண் களிக்குமாறு கண்டு அச்சோதியோடு ஒன்றாய்க் கலந்து இருந்த பின்னர் நாம் இவ்வுலகத்திலே பிறந்த மாயமான காட்சியையும் வேறுபல மயக்கங்களையும் மறந்துபோய் நம் எண்ணத்தில் கலந்த ஈசனோடு ஒன்றியிருப்பது உண்மையாகும்.

பிராணாயாமம் என்ற வாசி யோகமாகிய மூச்சுப் பயிற்சியினால் மேலேகண்ட பயனைப் பெறலாம் என்பது சிவவாக்கியரின் வாக்கு. பொதுவாகவே அனைத்துச் சித்தர்களும் பிராணாயாமப் போக்கைப் பின்பற்றித்தான் தங்கள் கருத்தை வலியுறுத்துகின்றனர். சீவனை நெறிப்படுத்திச் சிவனைக் காண்டலே அவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கைக் கோட்பாடு.

விண்கடந்து நின்றசோதி மேலை வாசலைத்திறந்து
கண்களிக்க உள்உளே கலந்துபுக்கு இருந்தபின்
மண்பிறந்த மாயமும் மயக்கமும் மறந்துபோய்
எண்கலந்த ஈசனோடு இசைந்துஇருப்பது உண்மையே

என்பது தான் சித்தர் சிவவாக்கியரின் கோட்பாடு. இப்பயிற்சி கைவரப் பெற்றால் மேலும் அவன் இறைவனிடம் நாட்டம் உடையவனாகி என்றும் பாலனாக நீண்ட நாள் வாழலாம். மேலான தன்மையையும் அடையலாம். இதனை நான் நஞ்சுண்ட கண்டராகிய சிவபெருமான் மேலும் அம்மையின் மேலும் ஆணையிட்டுச் சொல்கிறேன். இது

உண்மையே என்றும் பாடுகிறார் சிவவாக்கியர்.நாம் வாழ்வதற்கு மூலமான மூச்சினை வெளியே விட்டு உள்ளே வாங்கும் கலையறிந்தவன்.

மூலமான மூச்சுஅதில் மூச்சுஅறிந்து விட்டபின்
நாலுநாளும் முன்னில்ஒரு நாட்டமாகி நாட்டிடில்
பாலன்ஆகி நீட்டலாம் பரப்பிரமம் ஆகலாம்
ஆலம்உண்ட கண்டர்ஆணை அம்மைஆணை உண்மையே

என்பது பாடல்.

இன்றைய மாந்தரின் வழிபாட்டு முறைகள் பற்றிக் கூற வந்த சிவவாக்கியர் காலை மாலை நீராடி முழுகி வழிபடும் பேதையரான மானிடரையும் சாடுகிறார் அப்படியானால் நமக்கும் தண்ணீரிலேயே தினம் மூழ்கிக் கிடக்கும் தேரைக்கும் என்ன வேறுபாடு ? காலையிலேயே எழுந்திருந்து மூல முதற்பொருள் ஆகிய சிவனை அகக்கண்களால் காண்போர் தமக்கு முத்தி உடனே சித்தியாகும் என்பதை

காலைமாலை நீரிலே முழுகும் மந்த மூடர்காள்
காலைமாலை நீரிலே கிடந்ததேரை என்பெறும்
காலமே எழுந்திருந்து கண்கள்மூன்றில் ஒன்றினால்
மூலமே நினைப்பர் ஆகில் முத்தி சித்தி ஆகுமே

என்று கூறுகிறார். எங்களது கடவுள் எங்களது கடவுள் என்று கூறுவாரை நோக்கிச் சித்தர் திருமூலர் கூறிய ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மொழியை உளங்கொண்டு இப்படிப் பேசுகின்ற மாந்தர்களே ! அங்கு இங்கு எனாதபடி எங்கும் இருக்கின்ற இறைவன் ஒருவன். அவனே ஆதி மூர்த்தி; அப்படி இல்லை என்று சொல்பவர் வாய் புழுத்து மாய்ந்து போவர். ஆதலால் இறைவன் ஒருவனே என்ற கருத்தை வலியுறுத்துகிறார். சிலர் சித்தர்களைப் பித்தர் என்றும் கூறுவர். யார் சித்தர் ? யார் சிறியர் என்று அறிய இயலாத பேதையராய் மாந்தர் இருக்கும் வரையில் சித்தர்களுக்கு இந்த நாடும் அந்த நாடும் ஏன் காடும் ஒன்றேயாம். சித்தர்கள் தோற்றப் பொலிவினில் பித்தர்களைப் போலத்தான் தெரிவர். சாது சேஷாத்திரி சுவாமிகள் திருவாரூர் மடப்புறம் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் போன்றோர் நாய்களோடு

சேர்ந்து அவை உண்ணும் எச்சில் இலையில் உள்ள உணவைத் தாமும் உண்பர். ஆனால் அவர்கள் மாபெரும் சித்தர்கள் என்பதை மறுக்க முடியாது.

சித்தர்என்றும் சிறியர்என்றும் அறியொணாதசீலர்காள்
சித்தர்இங்கு இருக்கும்போது பித்தர்என்று எண்ணுவீர்
சித்தர்இங்கு இருக்கும்போது பித்தன்நாட்டு இருப்பரோ !
அத்தன்நாடும் இந்தநாடும் அவர்களுக்குளலாம் ஒன்றே

என்பதே அவர்களின் வாக்கு

கட்டையாலோ மட்டையாலோ கல்லினாலோ மஞ்சளாலோ துணியாலோ சாணியாலோ செய்யப்பெறும் கடவுளர் அனைவரும் வெட்ட வெளியே; அதனால் தெய்வம் என்பதற்கோர் வடிவமில்லை; அது அனைத்தும் கடந்த பரவெளி. முப்பாலும் பாழ் அதற்கப்பாலும் பாழ் என்பது திருமூலர் வாக்கு.

கட்டையால் செய்தேவரும் கல்லினால் செய்தேவரும்
மட்டையால் செய்தேவரும் மஞ்சளால் செய்தேவரும்
சட்டையால் செய்தேவரும் சாணியால் செய்தேவரும்
வெட்டவெளியது அன்றிமற்று வேறுதெய்வம் இல்லையே

உயிர்ப்பலியை வெறுப்பவர் சித்தர்கள் எருமை பன்றி முதலியவற்றைப் பலியிடுவோரும் அப்படிப் பலியிட்டால் தமது உடற்பிணிகளும் இன்னல்களும் தீரும் என்று எண்ணிப் பலியிடுகின்றனர். இத்தகைய பாவாத்மாக்களுக்கு நரகமே சித்திக்கும் என்பதே சித்தர்களின் வாக்கு.

உலகிலே இன்றைய நடைமுறையில் சாமியார்கள் உள்ள நிலை அன்றும் இருந்தது போலும். போலி வேடம் புனைவோரையும் சிவவாக்கியர் விட்டு வைக்கவில்லை; தங்கப் பல்லக்கில் ஊர்வலம் வருவதும் தங்கச் சிம்மாசனத்தின் மீதிருந்து அருள்வாக்குச் சொல்வதுமான போலிவேட தாரிகளைத் தாக்குவதில் சிவவாக்கியர் முன் நிற்கிறார். அவர்கள் தம் உடல் முழுதும் பூசிக் கொள்ளும் திருநீறு சந்தனம் முதலியவற்றோடு கூடிய தோற்றத்தைக் கண்டால் அவர்கள் மணலில் புரண்டு வந்த கழுதை போல் இருப்பர் என்கிறார்.

**நேசமுற்றுப் பூசைசெய்து நீறுபூசிச் சந்தனம்**
**வாசமோடு அணிந்துநெற்றி மைத்திலகம் இட்டுமே**
**மோசம்பொய் புனைசுருட்டு முற்றிலும்செய் மூடர்கள்**
**வேசரி களம்புரண்ட வெண்ணீறு ஆகும் மேனியே**

இவைஎல்லாம் பெளிவேடமே. இவர்கள் பொருள் ஈட்டுதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இத்தகைய ஆடம்பரமான முறையில் தங்கள் வாழ்வை நடத்துகின்றனர். தங்கச் சிம்மாசனம் தங்க நகைகள் வெள்ளியாலான வழிபடு பொருள்கள் ஆலவட்டம் சுருட்டி இகுயை சாமரம் காசு பணங்கள் இவற்றைத்தம் அடியார்களைத் தம் பகட்டு வார்த்தைகளால் மயக்கி மாயலீலைகளைச் செய்து மாதராசையோடு எவற்றை எல்லாம் துறக்க வேண்டுமோ அவற்றை எல்லாம் துறவாது சில சமயங்களில் சட்டத்தையும் மீறி அதன் பிடிக்குள்ளே மாட்டிச் சிறை செல்லும் அவல நிலைக்கும் ஆளாகின்றனர். சில போலிகள் காணாமலேயே போய் விடுகின்றனர்.

**வாதம்செய்வர் வெள்ளிபொன் மாற்றுயர்ந்த தங்கமும்**
**போதே குவருமுடிச்சுப் பொன்பணங்கள் தாவெனச்**
**சாதலனசெய்து எத்திச்சொத்து தன்னைக் கவர்ந்துமே**
**காததூரம் ஓடிச்செல்வர் காண்பதும் அருமையே**

ஒரு துறவிக்கு ஆடை தேவையில்லை. இடையில் ஒரு கௌபீனம் என்ற கோவணம் மட்டுமே போதும் என்று வாழ்கின்றவர்கள் துறவிகள். பகவான் இரமணர் போன்றவர்கள் அவ்வாறுதான் வாழ்ந்தனர். மகான் சேஷாத்திரி சுவாமிகள் திருவாரூர் மடப்புறம் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் அவ்வாறுதான் இருந்தனர். பலர் செம்மையான மனம் இல்லாதவராய்த் தாம் துறவிகள் என்று காட்டிக் கொள்வதற்காகப் பொய் வேடம் புனைந்து திரிகின்றனர். உழைக்க உடலில் வலுவிருந்தும் உழைக்காமல் வீடுதோறும் பிச்சை எடுத்து உண்பதையே வாடிக்கையாகக் கொண்டு வாழ்கின்றனர்.

இதனைக் கண்ட சிவவாக்கியர் அவர்களைச் சாடுகிறார்

**காவியும் சடைமுடி கமண்டலங்கள் ஆசனம்**
**தாவுஉருத்தி ரட்சம்யோக தண்டம்கொண்ட மாடுகள்**
**தேவியை அலையவிட்டுத் தேசம்எங்கும் சுற்றியே**
**பாவிஎன்ன வீடுஎலாம் பருக்கைகேட்டு அலைவரே**

என்பது பாடல்

*(தொடரும்....)*

## கண்ணப்ப நாயனார் (தொடர்ச்சி)

## (நற்கதை நம்பி அய்க்கண்)

"பூசனை தொடங்கும் முன்பு என்மேல் வைத்துள்ள மலர்களை அவன் செருப்படியால் நீக்குவது, அன்பென்னும் வெள்ளத்தின் கால் போன்று, முருகனின் இளம் பருவக்காலடி படுவதை விட இனிதானது. அன்பு நிறைந்த அவனது முகத்தின் வாய் உமிழும் தண்ணீர், அகத்தியரின் கலத்திலிருந்து பொங்கும் கங்கை நீரை விடப் புனிதமானது; அவன் வைக்கும் மலர்களும் அன்புள்ளம் விரிந்ததுபோல் சொரிவதால், முக்கடவுளரும் அமரரும் வந்து புனையும் எந்த மலரும் அவன் தலையிலிருந்து விழும் மலர்கள்போல், எனக்கு ஒவ்வாது; நெருப்பில் சரியாக வெந்துளதா என்று அன்பால் வாயில் வைத்து மென்று சுவைத்து அவன் படைக்கும் ஊன், வேள்வியில் முனிவர்கள் தரும் அவியுணவை விட இனியது; மறையுணர்ந்த மாமுனிவர்கள் உச்சரிக்கும் மந்திரங்கள் தோத்திரங்களை விட, முன்நின்று முகம் மலர அகம் நெகிழ, அன்பின் நினைந்து, என்னைத் தவிர வேறொன்றும் அறியாத அவனுடைய சொற்கள் நல்லன.." என்று திண்ணனுடைய ஒவ்வொரு செயலையும் அன்பு என்னும் உணர்வின் வழிநின்று சிவபெருமான் பாராட்டிச் சொல்கின்றார்.

"அவனுடைய செயலின் சிறப்பை நான் நாளை காட்டுகிறேன். நீ ஒளிந்திருந்து காண்பாயாக... மனக்கவலை மாற்றுக..." என்று அருளி மறைந்தார் சிவபெருமான்.

அவ்வாறே மறுநாள் காலைப்பொழுதில், வழக்கம் போல், மலை ஏறிப் பூசை முடித்து, பின்புறத்தில் ஒளிந்து நின்றார் சிவகோசரியார். வழக்கம்போல் விடிகாலையிலேயே கீழிறங்கிப்போய், தனி வேட்டையாடி, வழக்கமான பூசனைப் பொருள்களோடு, தேவரை நோக்கி வந்தான் திண்ணன்.

'இன்று காலந்தாழ்ந்துவிட்டதே' என்று வேகமாக அவன் வரும்போது, வழியில் பல தீய சகுனங்களைக் காட்டும் பறவைகள் அவன் முன் நெருங்கிச் சென்றன. 'இச்சகுனங்கள் இரத்தத்தைக் காட்டும்' என்பதை அனுபவத்தால் உணர்ந்திருந்த திண்ணன்

இறைவனுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டுவிட்டதோ? என்ற பதற்றத்துடன் நெருங்கி வந்தான்.

சிவகோசரியார்க்கு வேடுவனின் அன்பைச் சுட்டிக்காட்டுவதற்காக, சிவபெருமான், தன் ஒரு கண்ணிலிருந்து இரத்தம் வடியுமாறு செய்தார். இதைக் கண்ட திண்ணன் திடுக்கிட்டு மயங்கிக் கைகளிலிருந்த பூசனைப் பொருட்கள் சிதறிக் கீழே விழ, தரையில் பதைத்து வீழ்ந்தான். எழுந்து சென்று, கண்ணிலிருந்து வடிந்த குருதியைத் துடைத்தான். குருதி வடிவது நிற்கவில்லை; வடிந்து கொண்டேயிருந்தது. செய்வதறியாது திகைத்தான். 'யார் இது செய்தார்?' என்று சுற்றிலும் தேடிப் பார்த்தான்; 'இம்மலையில் எனக்கு எதிராக வீரர் யாரேனும் செய்தார்களா? விலங்கினங்கள் ஏதாவது தாக்கினவா? அறியேனே?' என்று சுற்றிப் பார்த்தான்; யாரையும் காணோம். திரும்பி வந்து தேவரைக் கட்டித் தழுவிக்கொண்டு, கண்ணீர் சொரிய அழுது அரற்றினான்.

'பாவியேன் கண்டவண்ணம் பரமனார்க்கடுத்த தென்னோ
ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க்கடுத்த தென்னோ
மேவினார் பிரியமாட்டா விமலனார்க்கடுத்த தென்னோ
ஆவதொன்றறிகிலேன் யான் என்செய்கேன்' என்று பின்னும் கதறிப்புலம்பினான்.

'அம்பினால் ஏற்படும் புண்களைக் குணப்படுத்தும் பச்சிலை மருந்துகளைத் தேடிக்கொண்டு வருகிறேன்' என்று, காட்டில் பல இடங்களிலும் மூலிகைகளைத் தேடிப்பறித்துக் கொண்டு, 'மனத்தினும் கடிது வந்து' அம்மருந்துகள் பிசைந்து வார்த்தான். பச்சிலை மருந்துகளும் பயனின்றிப்போக, 'ஊனுக்கு ஊன்' என்னும் முதுமொழி அவனுக்கு நினைவு வந்தது.

தமிழகத்துச் சிற்றூர்ப்புறங்களில் 'ஊனுக்கு ஊன்' என்னும் மருத்துவம் பழக்கத்திலிருந்தது. மனிதர்க்குக் கால் வலி என்றால், ஆட்டின் கால்களை வேகவைத்துச் சாறு செய்து உண்பதும், கண்நோய் தீர்க்க ஆட்டின் கண்களைச் சமைத்துச் சாப்பிடுவதும், இதய நோய் குணமடைய ஆட்டின் நெஞ்சுப்பகுதியை உணவாக்கி உண்பதும் பழக்கம்.

'என் கண்ணை அம்பால் இடந்து தேவரின் கண்ணில் வைத்தால், கண் நோய் தீர்ந்துவிடும்', என்று முடிவு செய்து, திண்ணன் தன் கண்ணை அம்பால் குத்தி எடுத்து, தேவரின் கண்ணில் அப்பியதும் குருதி வடிவது நின்று சரியாகி விட்டது.

இதைக் கண்டதும் மகிழ்ச்சியில் துள்ளிக்குதித்து, தோள்களைத் தட்டிக்கூத்தாடி, 'என் அறிவால் செய்தது மிக நன்று' என்று மகிழ்ந்தான் அவன். திண்ணனின் அன்பின் திறத்தை மேலும் காட்ட, சிவபெருமான் மற்ற கண்ணிலும் குருதி வடியச் செய்தார். இதைக் கண்டதும் திண்ணன் கலங்கவில்லை, மயங்கவில்லை.

"இதனுக்கு அஞ்சேன், ஏனெனில் இதற்கு மருந்து கை கண்டேன். இன்னும் ஒரு கண் இருக்கிறது. அதை இடந்து அப்பி, அந்தக் கண்ணின் குருதியையும் நிறுத்துவேன்.." என்று மகிழ்ச்சியடைந்தான் அவன்.

தன் இரண்டாவது கண்ணை இடந்த பிறகு, சிவனின் இடது கண் இருக்குமிடம் தெரியாமல் போகுமே அதைக் காட்டுவதற்காக, தன் இடது காலை அந்த இடத்தில் ஊன்றிக் கொண்டு, 'ஒரு தனிப் பகழி'யை எடுத்துத் திண்ணன் தன் கண்ணில் வைத்தான்.

திண்ணனின் அன்பின் உச்சத்தைக் காட்டும்படி, அவனது இரண்டாவது கண்ணையும் தோண்டும் பேறு பெற்றதால், அந்த அம்புக்கு 'ஒப்பற்ற தனிப்பெருமை பெற்ற பகழி' என்ற சிறப்புப் பெயர் வழங்கியிருக்கிறார் சேக்கிழார்.

உடனே பொறுத்தலாற்றாத துடிப்போடு, காளத்தியப்பர் திண்ணனுடைய கையைப் பிடித்துக் கொண்டு, "கண்ணப்ப நிற்க! கண்ணப்ப நிற்க! கண்ணப்ப நிற்க!" என்று மூன்று முறை சொன்னார்.

முக்கண்ணன் அல்லவா சிவபெருமான்? ஆகவே திண்ணனை மூன்று முறை 'கண்ணப்பன்' என்று பெயர் சூட்டி அழைக்கின்ற கருணையுள்ளத்தைக் காண்கிறோம்.

வேடுவர் தலைவன், தன் கண் இடந்து அப்பும்போதும், ஊனமுது உகந்த ஐயர், அவனது கையைப் பிடித்துத் தடுக்கும்போதும், சிவகோசரியார் கண்டு அன்பின் வழிபாட்டுச் சிறப்பை உணர்ந்தார்.

திண்ணனைக் கையால் பிடித்துக்கொண்டு "மாறிலாத அன்புடையவனே! என் வலப்புறம் நிற்க!" என்று உமையொருபாகன் அருள்புரிந்தார்.

அன்பின் பிழம்பாய்த் திரிந்த காளத்தி வேடனைப்போல், கம்பனும் கங்கைக் கரையில் ஓர் அன்பின் உருவத்தைப் படைத்துக் காட்டுகிறான். கங்கையாற்றில் நாவாய் ஓட்டும் குகன், இராமன் காட்டுக்குச் செல்லும் வழியில் அவனைச் சந்திக்க வருகிறான். முனிவர்கள் குழுமியுள்ள ஆசிரமத்தின் உள்ளே இராமன் வீற்றிருக்க, தம்பி இலக்குவன் வெளியே நிற்கிறான். அவனைப் பார்த்ததுமே, அவனை இராமன் என்று நினைத்த குகன்

'தேவ, நின் கழல் சேவிக்க வந்தனன்
நாவாய் வேட்டுவன் நாயடியேன்' என்றான்.

அவனுடைய கரிய தோற்றத்தையும் உடல் நாற்றத்தையும் உணர்ந்துகொள்கிறான் இலக்குவன்; ஆயினும், அவனுடைய உள்ளத்தின் தன்மையைப் புரிந்துகொள்கிறான்.

உள்ளம் தூயவன்: தாயினும் நல்லான்

என்று குகனை இராமனிடம் அறிமுகப்படுத்துகிறான் இலக்குவன். 'எல்லை நீத்த' அன்பின் உருவமாய்த் திகழும் குகன்,

'தேனும் மீனும் அமுதினுக்கு அமைவதாகத்
திருத்தினன் கொணர்ந்தேன்; என்கொல் திருவுளம்?'

என்கின்றான்.

ஏறத்தாழ, பெரிய புராணத்தில், திண்ணன் பேசிய சொற்கள் தான் : "உயர்ந்த மலையிலிருந்து திரட்டிய தேனையும், ஆழ்ந்த நீரிலிருந்து கொணர்ந்த மீனின் கறியையும், அமுதுக்குச் சமமாகத் திருத்தி அமைத்துக் கொண்டு வந்திருக்கிறேன். தங்கள் திருவுள்ளம் யாதோ?" என்று கேட்கிறான் கங்கை வேடன். சுற்றிலும் முனிவர்கள் கூட்டம்; மீன் நாற்றத்தையும் வேடனின் நாற்றத்தையும் உணர்ந்து அமர்ந்திருக்கிறார்கள்.

'அன்பின் படையலோடு வந்துள்ள குகனிடம் இராமன் பேசுகின்றான்.

அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினின் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால் அமிழ்தினும் சீர்த்த அன்றே?
பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம்; எம்மனோர்க்கும்
உரியன. இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?' என்றான்

அன்பினால் கொடுத்தது, அமுதத்தை விடச் சிறந்தது; பரிவோடு கொண்டு வந்த இவை பவித்திரம்; எம்மனோர்க்கும் உரியதே; இனிதாக நாமும் உண்டனம் அன்றோ?' என்று அந்த ஊன் படையலை ஏற்றுக்கொள்கிறான் இராமபிரான். குகன், 'அமுதுக்குச்சமம்' என்றான்; ஆனால் இராமனோ அமுதத்தினும் சிறந்தது என்று ஏற்றுக்கொள்கிறான்.

பெரிய புராணத்தில், சிவபெருமான், 'திண்ணனின் ஊன், முனிவர்களின் அவியுணவை விடச் சிறந்தது' என்று சிவகோசரியாரிடம் மட்டுமே கனவில் கூறுகிறார். இங்கே இராமபிரான், 'குகனின் படையல், அமுதத்தை விடச் சிறந்தது' என்று முனிவர்கள் கூட்டத்திலேயே அறிவிக்கிறான்.

இவ்வாறு கம்பன் படைத்துள்ள குகன், மூல நூலான வான்மீகத்திலே இல்லை என்பது இங்கே நினைக்கத்தக்கது.

வால்மீகியின் இராமாயணத்திலே, குகன், கங்கைக் கரையில் உள்ள சிருங்கி பேர நகரின் மன்னன். இளமையிலிருந்தே இராமனுக்கு நண்பனாக விளங்கியவன். இராமன் காட்டுக்கு வருகிறான் என்று அறிந்ததும், அரச குகன், அறுசுவை உண்டி, உயர்ந்த பானங்கள், சுவையான பழங்கள் முதலிய அரச விருந்துப் பொருள்களுடன் வந்து இராமனைச் சந்திக்கிறான். ஆனால் இராமன், தான் தந்தையின் கட்டளைப்படி, அரச வாழ்வைத் துறந்து, கானகத்திற்குத் தாபத உடையில் வந்திருப்பதால், அரச உணவை ஏற்கக் கூடாது என்றும் காட்டில் முனிவர்கள் உண்ணும் உணவையே உண்ண வேண்டும் என்றும் கூறி, நண்பனுடைய விருந்தை ஏற்காமல் திருப்பியனுப்பிவிடுகிறான்.

கம்பன், குகன் பாத்திரத்தில் ஏன் இப்படி ஒரு தலை கீழ் மாற்றத்தை உருவாக்கினான்?

கம்பன் வாழ்ந்த காலத்துச் சூழலும், சிவனடியார் கண்ணப்பரின் குணச்சித்திரமும், கவிச்சக்கரவர்த்தியின் மனதிற்குள் அழுத்தமான தாக்கத்தை ஏற்படுத்திவிட்டன. கி.பி.6-ஆம் நூற்றாண்டு தொடங்கி, தமிழகத்திற்குள் நுழைந்து தலைதூக்கி நின்ற சமணத்தை, ஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் வீழ்த்தி, சைவ சமயத்தை உயர்த்தி, மக்களிடையே சிவ வழிபாட்டைப் பரப்பிக்கொண்டு வந்தனர். அப்போது வைணவத்தைச் சார்ந்த பெருமக்கள், திருமால் வழிபாட்டை முன்னிறுத்தி மக்களிடையே பரப்பிவந்த பொழுது, சில இடங்களில் இரு சமயத்தினரிடையேயும் பூசல்கள் எழுந்துவந்ததைக் காண்கிறோம்.

திருமாலின் சிறப்பை உயர்த்திக் காட்ட நினைத்த கம்பர், வான்மீகத்தில் இல்லாத இரணியன் கதையையும் மாபலியின் கதையையும், தன் இராம காதையில் புகுத்தித் தன் கவித்திறத்தால் வைணவ வழிபாட்டின் சிறப்பை வெளிப்படுத்தினார். வேத, ஆகம வழிபாடுகளை விட, அன்பர்களின் எளிய அன்பு வழிபாட்டையே சிவபெருமான் விரும்புகிறார் என்ற கருத்து மக்களிடையே சைவத்தின் எளிமையைப் பறைசாற்றியதால், திருமாலும் அத்தகைய அன்பு வழிபாட்டை ஏற்று மகிழ்பவர்தான் என்பதை நிலை நாட்டவே, அரசகுகனை வேட்டுவக் குகனாக்கி, தேனும் மீனும் கொண்டு வரச்செய்து, 'அன்பால் படைக்கும் படையல், மீனாக இருந்தாலும், அது அமுதத்தை விடச் சிறந்தது. அதனை யாமும் உண்டோம்' என்று முனிவர்களின் முன்னிலையிலேயே, இராமபிரானை அறிவிக்கச் செய்கிறார் கம்பர்.

மேலும், குகனைத் தன் உடன்பிறந்தவனாகவே ஏற்றுக்கொண்டு, 'குகனொடும் ஐவரானோம்' என்று தொடங்கி, குரக்கினத் தலைவனையும் அரக்கர் குலத்தவனையும் இராமன் சகோதரர்களாக ஏற்றுக்கொள்ளச் செய்கிறார் கம்பர். வால்மீகியின் இராமாயணத்தில் இறுதியில் முடிசூட்டு விழாவின்போது, பரதன், சுக்கிரீவனை மட்டுமே, ஐந்தாம் சகோதரனாகப் போற்றி ஏற்றுக்கொள்கிறான் என்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.



## அந்த ஒரு மணி நேரம்

தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி

கோவிலூர் ஆதீனம் செய்து வரும் அறப்பணிகளில் நூல் வெளியீடும் ஓர் இன்றியமையாத பணி: அதன் வெளிப்பாடாக ஆதீனத்தில் பன்னிரண்டாம் பீடாதிபதியாக அருட் செங்கோல் ஓச்சிய சீர் வளர் சீர் நாச்சியப்ப தேசிக சுவாமிகள் காலத்தில் மக்கள் பதிப்பாகப் பதிப்பித்த சங்க இலக்கிய நூல்களின் உரை நூல்களை இந்தியக் குடியரசுத் தலைவர் மேதகு அப்துல்கலாம் வெளியிட வேண்டும் என்ற திட்டத்தின்படி மகா சந்நிதானம் அவர்கள் உரையாசிரியர் எழுவரையும் ஆதீன மேலாளர்கள் சிலரையும் அழைத்துக் கொண்டு ஆகாய விமானத்தில் புதுதில்லிக்குக் கூட்டிப் போனார்கள்.

29.9.2005-ல் பகல் 1.30 மணியளவில் குடியரசுத் தலைவரைச் சந்திக்க நேரம் குறித்தபடி 1.00 மணிக்குக் குடியரசுத் தலைவர் மாளிகைக்குச் சென்றோம். குறித்தபடி 1.30 மணியளவில் தலைவரின் அறைக்குள் நுழைந்தோம்.

கோவிலூர் ஆதீன கர்த்தரை வரவேற்கும் இந்து மத முறைப்படி அறைவாயிலின் முகப்பில் வந்து நின்று பூக்கூடை, பழக்கூடை தந்து வரவேற்று உள்ளே அழைத்துப் போய், தனி இருக்கையில் அமரச் செய்ததும் மற்றவர்களை அந்தந்த இருக்கையில் இருக்கச் செய்துவிட்டுத் தானும் ஓர் இருக்கையில் அமர்ந்தார்கள்.

தலைவர் அமர்ந்த இருக்கைக்கு முன்னர் இருந்த மேசையில் கோவிலூரிலிருந்து ஒரு மாதத்திற்கு முன்பே அனுப்பப்பட்டிருந்த மக்கள் பதிப்பான சங்க நூல்கள் வைக்கப்பட்டிருந்தன; அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து உரை எழுதிய ஒவ்வொருவரையும் தனித்தனியே கேட்டறிந்தார்கள்.

இறுதியாகப் புறநானூற்றுக்கு உரை எழுதியவர் யார் ? என மீண்டும் ஆவலுடன் கேட்டு 186 ஆம் பாடலான "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம், அதனால் யானுயிர் என்பது அறிகை, வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே" என்றதற்குரிய உரைச் சிறப்பைப் பெரிதும் பாராட்டினார்கள்.

உரை எழுதிய செந்தமிழ் அந்தணர் இரா. இளங்குமரனாரைப்

பாராட்டுகையில், "இப்பாடலில் உள்ள மன்னன் வேந்தன் என்ற சொற்களுக்கு அரசன் என்பதாகப் பொருள் எழுதாமல் ஆள்பவன், ஆள்வோர் என எழுதிய உரையானது காலத்திற் கேற்றதாகும். இன்று மன்னர்கள் இல்லாததால் ஆளுதல் என்பது எந்தத் துறைக்கும் பொருந்தும் என்பதால் நாடாளும் பொறுப்பிலிருந்து நிறுவனத்தின் தலைமை ஈறாக மக்களாட்சி முறையில் இது மிகமிகப் பொருத்தமானதாகும்." என்றார்.

மேலும், "இந்தத் தலைமைப்பண்பை ஒவ்வொரு அரசியலாரும், நிறுவனப் பொறுப்பாளரும் உணர்ந்து நடந்தால் நம்நாடு நலம்பெறும்" எனத் தம் விருப்பத்தையும் வெளிப்படுத்தினார்.

இந்த உரை நுட்பத்தைத் தேர்ந்து தெளித்து பாராட்டியதால் நாட்டின் மீது கொண்ட குடியரசுத் தலைவரின் பற்று, புறநானூற்றுப் பாடலுக்குரிய அகச் சான்றாக அப்துல் கலாமே உள்ளார் என நாங்கள் எல்லோரும் உணர்ந்தோம்.

இப்படியாக நூல்களைப் பதிப்பித்த கோவிலூர் ஆதீன கர்த்தரைப் பாராட்டி மகிழ்ந்ததும் பிரியா விடை பெறும் நிலையில் "கோவிலூர் எங்கே உள்ளது" எனக் குடியரசுத் தலைவர் கேட்டார். அவரது கேள்வியின் நுட்பத்தில் ஓர் உண்மை ஒளிந்திருந்ததைப் பின்னரே நாங்கள் தெரிந்து கொண்டோம்.

காரைக்குடியிலிருந்து திருப்புத்தூர், மதுரை செல்லும் நெடுஞ்சாலையில் காரைக்குடியை அடுத்துக் கோவிலூர் உள்ளது என மகா சந்நிதானம் மொழிந் தருளியதும் தம் பயணக்குறிப் பேட்டைப் பார்த்த தலைவர் ஆறு திங்கட்குப்பிறகு காரைக்குடி மின்வேதியல் நிறுவனத்திற்கு வரும்போது "நான் தங்கள் சந்நிதிக்கு வருகிறேன்" என்றார்கள்.

ஓர் இசுலாம் மதத்தைச் சார்ந்தவர் கோவிலூருக்கு வருகிறேன் எனக் கூறாமல் சந்நிதிக்கு வருவதாகக் கூறியது மதநல்லிணக்கத்தின் துளிர்ப்பு வாசகமாக இருந்தது. இதைக் கேட்ட என் அருகிருந்த கவிஞர் சிங்கார வடிவேலன் (ஐங்குறு நூற்றுக்கு உரை எழுதியவர்) மிகவும் உணர்ச்சிவயப்பட்டு உடலெல்லாம் நடுங்க, ஐயா நீங்கள் சொன்ன வார்த்தை மெய்சிலிர்க்க வைத்துவிட்டது எனத் தழுதழுத்த குரலில் கூறினார்.

நேரக் கணக்கின்படி அரை மணியாக ஒதுக்கப்பட்ட பேட்டி ஒரு மணி நேரமாக நீண்டதும் நாங்கள் பிரியா விடை பெற நேர்ந்தது. குடியரசுத் தலைவர் தம் இருக்கையிலிருந்து எழுந்து வந்து கோவிலூர் ஆதீன கர்த்தரை வணங்கி வழியனுப்ப அறையின் முகப்பு வாயில் வரை வந்தார். இக்காட்சி புலவர்களுக்குப் பரிசில் கொடுத்து வழியனுப்பும் சங்க கால மன்னர்கள் அரண்மனை வாயில் வரை வந்தது போன்றதாக இருந்தது.

மகா சந்நிதானத்துடன் பிரியாவிடைபெற்றுக் குடியரசுத் தலைவரை வணங்கிவிட்டு அறையின் வெளிப்புறம் வந்த எங்கள் எல்லோரையும் மீண்டும் ஓர் ஆள்விட்டனுப்பி மீண்டும் எங்களை அறைக்குள் குடியரசுத் தலைவர் வரவேற்று இருக்கையில் அமர்த்தி "உங்களுள் ஓலைச்சுவடியைப் படித்துப் பொருள் கூறுவோர் யார் ?" என வாஞ்சையோடு கேட்டார்கள்.

செந்தமிழ் அந்தணர் இரா. இளங்குமரனாரும் டாக்டர் சுப. அண்ணாமலையாரும் தங்களைக் கூறிக் கொண்டதும் தமது கண்ணாடிப் பேழையிலிருந்த ஓலைச்சுவடிக் கட்டை வேலையாள் மூலம் கொணரச் செய்து ஓரிரு சுவடியைப்படித்துக் கூறுமாறு சொன்னார்.

சுவடியில் எழுத்துக்கள் சரிவரத் தெளிவாக அறியப்படாமலிருந்ததால் அந்த உண்மையைக் கூறிய இருவரும், இவற்றைத் தாங்கள் அனுப்பி வைத்தால், கோவிலூரில் பச்சிலை மூலிகை தடவிச் சுவடி எழுத்துக்களைத் தெரிந்து பொருள் எழுதியனுப்புவதாகக் கூறினார்கள் உடனே, மேலும் சில சுவடிகளையும் சேர்த்துக் கட்டி எங்களிடம் கொடுக்கும்படி ஆணையிட்டவாறு மாளிகைவாசி தந்ததும் இராமனின் கணையாழியைப் பெற்ற சீதைபோல் மகிழ்ந்து மாளிகையை விட்டு வெளியேறினோம்!

ஆம்! அந்த ஒரு மணி நேரம் சொர்க்கத்திலிருந்த சுகம்! மேலும் உங்கள் சந்நிதிக்கு வருகிறேன் எனக் கூறியவாறு குடியரசுத் தலைவர் கலாம் அவர்கள் காரைக்குடி மத்திய மின் வேதியல் கூட்டத்திற்கு வருகை புரிந்ததும் முன் அறிவிப்பின்படிக் கோவிலூரின் புனித பூமிக்கும் வந்தார்கள்.

பூரண கும்ப மரியாதையுடன் கோவிலூர் மகா சந்நிதானம் குடியரசுத் தலைவரை வரவேற்றார்கள். சீர் வளர் சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளின் வரவேற்பு மழையில் நனைந்த குடியரசுத் தலைவர், அருள்மிகு திருநெல்லையம்மன் உடனாய கொற்றவாளீசர் திருக்கோயிலுக்குள் நுழைந்து பரிவட்ட மரியாதைகளுடன் ஒவ்வொரு தெய்வச் சந்நிதிகளிலும் நின்றவாறு கோயிலின் அற்புதச் சிறப்பிற்குரிய சிற்ப வேலைப்பாடான தூண்களைப் பார்த்து மகிழ்ந்ததுடன் சிற்பங்களை இரும்பு வலைக்கம்பிகளால் பாதுகாப்பாக வைத்துப் போற்றியதைப் பெரிதும் பாராட்டினார்கள்.

சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் அருளாட்சி கொண்டதும் கோவிலூர் ஆதீனம், "கோகினூர் வைரம் போல்" ஒளிரத் தொடங்கியது அதன் சிறப்பில் அமைக்கப்பட்டிருந்த முத்துராமலிங்க ஆண்டவர் பாலர் பள்ளி முதல் கோயிற் கலைகளைப் பயிற்றுவிக்கும் பலவற்றையும் கண்டு களித்தார்கள்.

பாலர் பள்ளிப் பிள்ளைகளோடு அமர்ந்து அளவளாவித் தாம் மகிழ்ந்ததோடு பிள்ளைகளுக்கும் மகிழ்ச்சியூட்டினார்கள். திருமுறை, வேத பாடசாலை மற்றும் வாகனம், தேர், வெண்கலச் சிலை, கற்சிலை செய்யக் கற்றுத்தரும் இடங்களையெல்லாம் பார்வையிட்ட குடியரசுத் தலைவர் நாதசுரம் - மேளம் கற்றுத்தரும் பள்ளியில் இருபது நிமிடங்கள் இருந்து தமக்குப்பிடித்த பண்களை வாசிக்கச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்தார்கள்.

ஆம்! குடியரசுத் தலைவர் அப்துல் கலாம் அவர்கள் கோவிலூர் வருகையானது அழகிய வெல்வெட்டுத் துணிச் சிறப்பைப் போன்ற கல்வெட்டுப் பதிவாகும் என்பதில் ஐயமில்லை.

இப்படியாகத் தில்லியில் குடியரசுத் தலைவர் மாளிகையில் சங்க நூல் வெளியீட்டிற்கும் மேதகு அப்துல் கலாம் அவர்கள் கோவிலூர்க்கு வருகை புரிந்ததற்கும் மகா சந்நிதானம் நாச்சியப்ப சுவாமிகளுடனிருந்து உதவிய பெருமை தற்போது கோவிலூர் ஆதீன கர்த்தராய் அருட்பீடத்துள்ள சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளையே சாரும்.




# திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில்

1984 இல் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற வேளையில் உருவான தமிழ்ச்சுரங்கம் பேராசிரியர் முனைவர் ஆறு. அழகப்பன் அவர்களைத் தலைவராகக் கொண்டு அருந்தமிழ்ப் பணிகளைச் செய்து வருகிறது. தமிழன் என்ற உணர்வுகளைப் பெற, சில குறியீடுகளை ஒருபணியாகக் கொண்டுள்ளது. அவ்வகையில் உலகத்தமிழர் உவப்ப, தமிழ்த்தாய் உருவம் உருவாக்கிப் பரப்பும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது. தமிழ் உணர்வு மங்காமல் இருக்க, தமிழ்த்தாய், திருவுருவத்தை, திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில் உருவாக்கி வீற்றிருக்கச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. முயற்சி திருவினையாக்கிட அருள்மிகு அண்ணாமலையார் அருள் பாலிப்பாராக.

**தமிழ்ச்சுரங்கம்**
சென்னை - 92